# இதுதான் வெற்றிக்கு வழி

## முஸ்லிமாவது எப்படி?

Tamili

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بسلطانة

THE COOPERATIVE OFFICE FOR CALL & FOREIGNERS GUIDANCE AT SULTANAH

# இதுதான் வெற்றிக்கு வழி

## முஸ்லிமாவது எப்படி?

# الطريق إلى النجاة

## كيف تكون مسلما؟

الإعداد

فيصل بن سكيت السكيت غفر الله له ولوالديه ولجميع المسلمين

عضو الدعوة بوزارة الشئون الإسلامية والأوقاف والدعوة والإرشاد

ترجمه إلى اللغة التاميلية

حبيب لبي عليار

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالنسيم

تحت إشراف وزارة الشئون الإسلامية والأوقاف والدعوة والإرشاد

خلف مستشفى اليمامة- حي المنار- ص. ب: 51584- الرياض 11553

هاتف 2350194- 2350195- 2328226 - ناكس 2301465

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே உரித்தாகுக! அவனிடமே நாம் உதவி தேடுகின்றோம். அவனிடமே பிழை பொறுக்கத் தேடுகின்றோம். நமது ஆத்மாவின் தீங்கிலிருந்தும், கெட்ட செயல்களிலிருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகின்றோம். அல்லாஹ் யாருக்கு நேர்வழி காட்டுகின்றானோ அவர்களை வழிகெடுக்க யாராலும் முடியாது. எவர்களை வழிகெடுக்க நாடினானோ அவர்களுக்கு நேர்வழி காட்ட யாராலும் முடியாது. வணக்கத்திற்குத் தகுதியுடையவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாருமில்லை. அவன் இணைதுணையற்றவன் என்றும், நபிகள் நாயகம் முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும், தூதருமாவார்கள் என்றும் நாம் சான்று பகர்கின்றோம்.

இஸ்லாத்தில் இணைய விரும்புபவர்களுக்காக இஸ்லாத்தின் அடிப்படைகளை சுருக்கமாக இங்கு நாம் முன் வைக்கின்றோம்.

அல்லாஹ் உனக்கு அருள் புரியட்டும். இஸ்லாம் ஒன்று தான் வெற்றிக்குரிய ஒரே வழியாகும் என்பதை நீ அறிந்து கொள் இது குறித்து அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான் :

﴿ إِنَّ الدِّيْنَ عِنْدَ اللهِ اْلإِسْلاَمُ ﴾

**"நிச்சயமாக அல்லாஹ்விடத்தில் (அங்கிகரிக்கப்பட்ட) மார்க்கம் இஸ்லாம் மட்டுமே ஆகும்,,** *(3: 19)*

﴿ وَمَنْ يَبْتَغِ غَيْرَ اْلإِسْلاَمِ دِيْناً فَلَنْ يُقْبَلَ مِنْهُ وَهُوَ فِي اْلآخِرَةِ مِـــنَ الْخَاسِرِيْنَ﴾

**"இன்னும் இஸ்லாம் அல்லாததை மார்க்கமாக எவராவது தேடினால் அப்பொழுது அவரிடமிருந்து (அது) அங்கீக**

**ரிக்கப்படவே மாட்டாது. மேலும் மறுமையில் அவர் நஷ்டமடைந்தோரில் ஒருவராக இருப்பார்,,**(3: 85)

*இஸ்லாம் ஒன்றுதான் வெற்றிக்கான வழி என்பதை நீ அறிந்து கொண்டால், அந்த இஸ்லாம் ஐந்து அடிப்படைகளைக் கொண்டுள்ளது என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும். இது குறித்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறும்பொழுது :*

( بُنِيَ الْإِسْلَامُ عَلَى خَمْسٍ : شَهَادَةَ أَنْ لَا إِلَهَ إِلَّا اللهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُوْلُ اللهِ ، وَإِقَامِ الصَّلَاةِ، وَإِيْتَاءِ الزَّكَاةِ، وَصَوْمِ رَمَضَانَ، وَحَجِّ الْبَيْتِ ) متفق عليه

*''இஸ்லாம் ஐந்து அடிப்படைகளில் நிறுவப்பட்டுள்ளது. அவையாவன, வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும், முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவனது திருத்தூதர் என்றும் சாட்சி சொல்லுதல், தொழுகையை நிலை நாட்டுதல், ஸகாத் எனும் ஏழை வரியைக் கொடுத்து வரல், ரமழான் (மாதத்தில்) நோன்பு நோற்றல் என்பனவாகும்,, என்று கூறினார்கள் .(புகாரி, முஸ்லிம்)*

## முதலாம் கடமை :

*வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லையென்றும் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவனது அடியாரும் திருத்தூதருமாவார்கள் என்றும் நீ சாட்சி கூறவேண்டும்.*

***அ) ''லா இலாஹ இல்லல்லாஹ்,,*** *எனச் சாட்சி கூறுவதில் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருக்கும் இலாஹிய்யத்*

எனும் இறைத்தன்மை இல்லை என்பதும், அல்லாஹ்வை மட்டுமே இறைவனாக ஏற்க வேண்டும் என்பதும் அவசிய மாகின்றது.

﴿ ذَلِكَ بِأَنَّ اللهَ هُوَ الْحَقُّ وَأَنَّ مَا يَدْعُوْنَ مِنْ دُوْنِهِ هُوَ الْبَاطِلُ ﴾

"**நிச்சயமாக அல்லாஹ்-அவன்தான் உண்மையாளனாவான் அவனையன்றி (வேறு) எதை அவர்கள் பிரார்த்திக்கி றார்களோ அது பொய்யானதாகும்**,, (22:62) என்ற வச னம் இதை உணர்த்துகின்றது.

வணக்கங்களில் எதையும் அல்லாஹ்வைத் தவிர வேறு எவருக்கும் செய்யலாகாது. அது பற்றி அல்லாஹ் மேலும் கூறுகையில் :

﴿ وَمَنْ يَدْعُ مَعَ اللهِ إِلَهاً آخَرَ لاَ بُرْهَانَ لَهُ بِهِ فَإِنَّمَا حِسَابُهُ عِنْدَ رَبِّهِ إِنَّهُ لاَ يُفْلِحُ الْكَافِرُوْنَ ﴾

"**எவன் அல்லாஹ்வுடன் வேறு கடவுளை அழைக்கி ன்றானோ அவனுக்கு அதற்கு எத்தகைய சான்றும் இல்லை. அவனுடைய கணக்கெல்லாம் அவனுடைய இரட்சகனிடம்தான் உண்டு நிச்சயமாக நிராகரிப்பவர் கள் வெற்றி பெற மாட்டார்கள்**,, (23: 117) என்று கூறியு ள்ளான்.

இது மிக முக்கியமான கலிமா – வார்த்தை – ஆகும். இத ன் பொருளை அறிந்து அதனை கண்ணியப்படுத்தினாலேய ன்றி வெறுமனே இதனை மொழிவது நன்மை பயக்கவும் மாட்டாது, அதனை மொழிந்தவனை இணைவைப்பிலிரு ந்து வெளியேற்றவும் மாட்டாது, முனாபிக்குகள் எனும் வே சதாரிகளும் இதனை மொழிகின்றனர், எனினும் அவர்கள்

நரகின் அடித்தளத்தில் இருப்பர், ஏனெனில் அவர்கள் அதனை நம்பவோ அதன்படி செயல்படவோ இல்லை. வெறுமனே மொழிகின்றனர். இவ்வாறே சமாதி வழிபடுவோரும் இவ்வார்த்தையை மொழிகின்றனர். எனினும் அவர்களது பேச்சும், நடத்தையும் இதற்கு மாற்றமாகவும், இதனை முறித்துவிடக் கூடியதாகவும் இருக்கின்றது. இவ்வார்த்தை அவர்களுக்கு எந்தப்பயனையும் அளிக்காது.

## இதற்கு எட்டு நிபந்தனைகள் உள்ளன

1 – அதன் பொருளை தெளிவாக அறிதல்.

2 – சந்தேகமற உறிதியாக அதை நம்புதல், இதை மொழிந்தவன் வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என்பதை உறிதியாக அறிந்திருத்தல் அவசியம்.

3 – அடியான் எல்லா விதமான வழிபாடுகளையும் அல்லாஹ் ஒருவனுக்காக செய்யும் இக்லாஸ்.

4 – உண்மை: இதை மொழிபவனது நாவை உள்ளமும், உள்ளத்தை நாவும் ஒத்துச் செல்லவேண்டும். வாயில் ஒன்றும், உள்ளத்தில் ஒன்றுமாக இருக்கக் கூடாது.

5 – நேசம் : இதை மொழிந்தவன் அல்லாஹ்வின் மீது நேசமற்றவனாக இருந்தால் அவனும் இறை நிராகரிப்பாளனாவான்.

6 – எடுத்து நடத்தல்: அதாவது அல்லாஹ் ஒருவனை வணங்குவதோடு அவனது ஷரீ – அத் வழிகாட்டுதல் ஒன்று தான் உண்மையானது என்றும் நம்புதல்.

7 – ஏற்றுக் கொள்ளல் : அல்லாஹ் ஒருவனை வணங்குவதை ஏற்று ஏனையதை விட்டுவிடுதல்.

8 – அல்லாஹ்வைத் தவிர வணங்கப்படும் அனைத்தையும் நிராகரித்து அவற்றை விட்டு விடுவதோடு அவை அசத்திய மானவை என்றும் நம்புதல் வேண்டும்.

**ஆ)** "**முஹம்மதுர்ரஸூலுல்லாஹ்**,, முஹம்மத் இறைத்தூதர் என சாட்சி சொல்லல், முஹம்மத் ஸல்லல்லாஹு அலை ஹிவஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் அடியார் என்றும், அவனது திருத்தூதர் என்றும், நபிமார்களில் இறுதியானவர் என்றும் நம்புவதுடன் நாம் சாட்சியும் கூறுகின்றோம், அத் தோடு அவர் ஏவியவைகளை எடுத்து நடப்பதும், அவர் அறிவித்தவைகளை நம்புவதும், அவர் தடுத்தவைகளை விட்டும் விலகி நடப்பதும் அவசியமாகும். மேலும் அவர் விதித்த, ஏவிய முறையிலன்றி அல்லாஹ்வை நாம் வழிபடு வதையும் தவிர்த்தல் வேண்டும்.

## இரண்டாம் கடமை

*தொழுகை :*

ஒரு நாளில் ஐவேளை தொழ வேண்டுமென அல்லாஹ் விதி த்துள்ளான் அத்தொழுகைகளாவன :

| | | |
|---|---|---|
| 1 – பஜ்ர் | – அதிகாலைத் தொழுகை | (2 ரக்அத்துக்கள்) |
| 2 – ளுஹர் | – மதியத் தொழுகை | (4 ரக்அத்துக்கள்) |
| 3 – அஸர் | – மாலைத் தொழுகை | (4 ரக்அத்துக்கள்) |
| 4 – மஃரிப் | – முன் இரவுத் தொழுகை | (3 ரக்அத்துக்கள்) |
| 5 – இஷா | – இரவுத் தொழுகை | (4 ரக்அத்துக்கள்) |

தொழுகைக்கு சுத்தம் அவசியமாகும். மல, சலம் கழித் தல் போன்ற சிறு தொடக்குடையவராக இருப்பவர் நீரால் சுத்தம் செய்த பின்னர் வுழுச் செய்ய வேண்டும். தூங்கிய வர், காத்துப் பிரிந்தவரைப் பொறுத்தவரை அவர் வுழு மட் டும் செய்து கொண்டால் போதுமானது.

இந்திரியம் வெளிப்படல், கணவன் மனைவி இல்லறத்தில் ஈடுபடல், மாதாந்த ருது, பிரசவத் தீட்டு ஆகிய உபாதைகளுக்கு உள்ளாகி இருத்தல் போன்ற பெருந்தொடக்குடையவர்கள் குளித்து, வுழுஉம் செய்து கொள்ள வேண்டும்

தொழுகையை உரிய நேரத்தில் தொழுவதுடன் ஆண்களாக இருந்தால் முஸ்லிம்களுடன் பள்ளிவாயலில் ஜமாஅத்துடன் தொழ வேண்டும். நோய், அச்சம் போன்ற காரணங்கள் இல்லாமல் ஒரு முஸ்லிம் ஜமாஅத் தொழுகையை விட்டு விடுதல் கூடாது.

அடுத்து தக்பீரதுல் இஹ்றாம் (என்ற ஆரம்ப தக்பீர்) தொடக்கம் ஸலாம் கொடுக்கும் வரை எப்படித் தொழவேண்டும் என்பதை அறிந்திருத்தல் அவசியமாகும்.

எந்நிலையிலும் தொழுகையைத் தாமதிக்கக் கூடாது, தனது சக்திக்கேற்ப உரிய நேரத்தில் நிறைவேற்றவேண்டும். பெண்ணைப் பொறுத்தவரை அவள் தொழுவதற்க்கு மிகச் சிறந்த இடம் அவளது வீடாகும். அடுத்து தொழுபவன்தான் முஸ்லிம், தொழாதவன் முஸ்லிம் அல்ல என்பதையும் அறிந்து கொள்.

பெண் மாதவிடாய், பிரசவ ருது ஆகிய நிலையிலிருந்தால் அப்போது தொழ வேண்டியதில்லை. இவற்றிலிருந்து சுத்தமாகி விட்டால் குளித்தபின் தொடர்ந்து தொழுகையை கடைப்பிடிக்க வேண்டும்.

## மூன்றாம் கடமை

ஸகாத்:

ஒரு குறிப்பிட்ட தொகைப்பணம் ஒரு வருட காலத்திற்கு ஒரு நபரிடம் இருக்குமானால் நூற்றுக்கு இரண்டரை வீதம் அவரிடமிருந்து பெறப்பட்டு ஏழைகளுக்கு வழங்கப்படும்

தர்மத்தையே (ஹ ாதத்தையே) ஸகாத் எனும் பதம் குறிக்கிறது.

## நான்காம் கடமை

றமழான் மாதகால நோன்பு :

நோன்பு என்றால் அல்லாஹ்வுக்கு அடிபணியும் நோக்கத்தில் அதிகாலையிலிருந்து சூரியன் மறையும் வரை உண்ணல், பருகல், உடல் உறவில் ஈடுபடல் ஆகியவற்றை தவிர்ந்திருக்கும் ஒரு வகை இபாதத்தைக் குறிக்கும்.

மாதவிடாய், பிரசவ ருது ஆகிய நிலையிலிருக்கும் பெண்கள் தொழுகை, நோன்பு ஆகியவற்றை விட்டு விடவேண்டும். அவர்கள் சுத்தமானதன் பின்னர் குளித்துவிட்டு நோன்பையும் தொழுகையையும் தொடர்ந்து நிறைவேற்றி வரவேண்டும். விடுபட்ட தொழுகைகளை கழாச் செய்யக் கூடாது. ஆனால் விடுபட்ட நோன்புகளைக் கணக்கிட்டு அடுத்த வருட நோன்பு வருவதற்கு முன் நிறை வேற்றி விட வேண்டும். அதே நேரத்தில் பெருநாள் தினங்களிலோ, துல்ஹஜ் மாதத்தின் 11, 12, 13 ஆகிய நாட்களிலோ, வெள்ளிக்கிழமைகளில் மட்டுமோ அந்நோன்புகளை நோற்கலாகாது. (வியாழன், வெள்ளி அல்லது வெள்ளி, சனி என்ற அடிப்படையில் நோற்கலாம்)

ரமழான் மாதத்தில் நோயுற்றிருப்பவர், பயணத்திலிருப்போர் ஆகியோர் நோன்பை விட்டு விட்டு ஏனைய மாதங்களில் ஏற்கனவே குறிப்பிட்ட அமைப்பில் விடுபட்ட நோன்புகளைப் பிடித்துக்கொள்ள அனுமதியுண்டு. இதனைப் பின்வரும் திருமறை வசனம் உணர்த்துகின்றது. :

﴿ فَمَنْ كَانَ مِنْكُمْ مَرِيْضًا أَوْ عَلَى سَفَرٍ فَعِدَّةٌ مِنْ أَيَّـــامٍ أُخَـــرَ ﴾

**எவரேனும் நோயாளியாகவோ, அல்லது பிரயாணத்திலே**

யோ இருந்தால் மற்ற நாட்களில் விடுபட்ட நோன்புக ளை எண்ணி (நோற்று) விடவும். (2 : 184)

## ஐந்தாம் கடமை

*ஹஜ் :*

*பயணத்திற்கான சகல வசதிகளையும் பெற்ற உடல் வலிமையுள்ள ஆண், பெண் அனைவர் மீதும் வாழ்வில் ஒரு முறை இது கடமையாகும். பெண்ணைப் பொறுத்தமட்டில் தந்தை, மகன், சகோதரன் போன்ற மஹ்றம் எனும் உறவு டைய ஆண்கள் அவளோடு செல்வதற்கு தயாறாக இல்லா விட்டால் அவள் மீது இது கடமையாகாது. இக்கடமை குறி த்து அல் – குர்ஆன் :*

﴿ وَ لِلّٰهِ عَلَى النَّاسِ حِجُّ الْبَيْتِ مَنِ اسْتَطَاعَ إِلَيْهِ سَبِيلًا ﴾

"**எவர்கள் அங்கு பயணம் செல்லச் சக்தியுடையவர்க ளாக இருக்கிறார்களோ, அத்தகைய மனிதர்கள் மீது, அல்லாஹ்வுக்காக (அங்கு சென்று அவ்) வீட்டை ஹஜ்ஜு செய்வது கடமையாகும்**,, (3:97) *என்று குறிப்பி டுகின்றது.*

*எவரேனும் ஒன்றுக்கு மேற்பட்ட முறை ஹஜ் செய்தால் அவருக்கு மகத்தான நற்கூலியுண்டு, ஆனால் ஒரு முறை செய்வதே அவர் மீது கடமையாகும்.*

*மேற்கூறப்பட்ட ஐந்துமே இஸ்லாதததின் அடிப்படைக் கடமைகளாகும்.*

### எச்சரிக்கை:

*கிறிஸ்தவர்கள் ஈஸா (அலை) அவர்களை கர்த்தர் (கடவுள்) என்றும், அவர் மூன்று கடவுள்களில் ஒருவர் என்றும், தேவகுமாரர் (கர்த்தரின் குமாரன்) என்றும் கூறுகின்றனர்.*

அவ்வாறே அவர் சிலுவையில் அறைந்து கொல்லப்பட்டார் என்றும் நம்புகின்றனர்.

இவை அனைத்தும் தவறான கூற்றுக்களாகும் . உண் மையில் அவர் அல்லாஹ்வின் அடியாரும், தூதருமாவார். ஏனைய இறைத்தூதர்களைப்போல் அவரும் ஒரு மனித ராவார். இறைமையில் அவருக்கு எத்தகைய பங்குமில்லை, அவர் சிலுவையில் அறையப்படவோ, கொல்லப்படவோ இல்லை.மாறாக யூதர்கள் அவரைக் கொலை செய்ய நாடிய போது அல்லாஹ் அவரை இரண்டாம் வானத்திற்கு உயர்த் திவிட்டான். கடைசி காலத்தில் அவர் பூமிக்கு இறங்கி வந்து சிலுவைகளை உடைத்தெறிந்து, பன்றிகளையும் கொல்லுவார்.

அவர் புதியதொரு மார்க்கத்தைக் கொண்டு வரமாட் டார். எமது நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸ ல்லம் அவர்களின் சன்மார்க்க சட்டங்களின் படியே தீர்ப் புக் கூறுவார், பிறகு அல்லாஹ் நாடும் கால அளவு வாழ்ந்து விட்டு மரணித்து, அதன் பின் ஏனைய படைப்புக்களுடன் மறுமையில் எழுப்பப்படுவார்.

## ஈமான் (இறை நம்பிக்கையின்) அடிப்படைகள் :

1 – அல்லாஹ்வை நம்புதல்.
2 – வானவர்களை நம்புதல்.
3 – வேதங்களை நம்புதல்.
4 – இறைத்தூதர்களை நம்புதல்.
5 – மறுமை நாளை நம்புதல்.
6 – விதி எனும் நிர்ணயத்தை நம்புதல்.

## முதலாம் அடிப்படை

*அல்லாஹ்வை நம்புதல் :*

*அல்லாஹ் ஒருவனே இறைவன் என்றும், அவனுக்கு இணை துணை இல்லையென்றும், படைத்தவனும், உணவளிப்பவனும், உதவி செய்பவனும், தீங்கு விளைவிக்கக் கூடியவனும் அவன் ஒருவனே என்றும், அவன் ஒருவன் மட்டுமே வணக்க வழிபாடுகளுக்குத் தகுதியானவன் என்றும், அவனுக்கு நிகரோ, சமமோ இல்லையென்றும், அவன் அனைத்தையும் கேட்கக் கூடியவன், பார்க்கக் கூடியவன் என்றும் நம்புதல் வேண்டும்.*

## இரண்டாம் அடிப்படை

மலக்குளை நம்புதல் :

*மலக்குகள் என்போர் ஒளியினால் படைக்கப்பட்டவர்கள். அவர்கள் மறைவுலகில் வாழ்வோராவர். நாம் அவர்களைக் காணாவிட்டாலும் அவர்களை நம்பவேண்டும். அவர்கள் அல்லாஹ்வின் சங்கையான அடியார்களாவர். அவனது ஏவல்களுக்கு அவர்கள் எத்தகைய மாற்றமும் செய்யமாட்டார்கள். ஏவப்பட்டதை அப்படியே எடுத்து நடப்பர். அவர்களுக்கு அல்லாஹ்வின் இறைமையில் எத்தகைய பங்குமில்லை. அவர்களின் எண்ணிக்கை கணக்கிலடங்காததாகும்.*

மலக்குகளை நம்புவது நான்கு விடயங்களை உள்ளடக்கி இருக்கிறது.

*1 – அவர்கள் இருக்கிறார்கள் என்பதை நம்புதல்.*

*2 – ஜிப்ரீல், மீகாயீல், இஸ்ரா::பீல் என பெயர் குறிப்பிடப்பட்டிருப்பவர்களை குறிப்பாகவும், பெயர் குறிப்பிடப்படாதவர்களை பொதுவாகவும் நம்புதல்.*

*3 – அவர்களது தோற்றமைப்பை அறிந்தால் அதை நம்புதல். உதாரணமாக ஜிப்ரீல் (அலை) அவர்களை அவர்களது உண்மையான தோற்றத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கண்டுள்ளார்கள், அவருக்கு 600 இறக்கைகள் இருந்தன என்றும் கூறியுள்ளார்கள், அதை நாம் அப்படியே நம்பவேண்டும்.*

*4 – அவர்களில் சிலர் சில காரியங்களுக்கு பொறுப்புச் சாட்டப்பட்டுள்ளார்கள் என்பதை அறிந்த வகையில் நம்புதல். உதாரணமாக ஜிப்ரீல் (அலை) அவர்கள் அல்லாஹ்வின் வஹியை நபிமார்களுக்கும், றஸூல் மார்களுக்கும் எத்தி வைத்தல், மீகாயீல் (அலை) அவர்கள் மழைக்கும், இஸ்ராபீல் (அலை) அவர்கள் உலக அழிவின் போது சூர் ஊதுவதற்கும், அவ்வாறே அல்லாஹ்வின் கட்டளைப்படி உரிய வேளையில் உயிர்களைக் கைப்பற்றுவதற்காக மலகுல் மவ்த் எனும் பெயருடைய மலகும் பொறுப்புச் சாட்டப்பட்டுள்ளார்கள் என்பதை நம்புதல்.*

## மூன்றாம் அடிப்படை

**வேதங்களை நம்புதல் :**

*வேதங்கள் என்பன மக்களுக்கு நேர்வழி காட்டவும், சத்தியத்தைத் தெளிவு படுத்தவும், அல்லாஹ்வால் அவனது தூதர்களுக்கு அருளப்பட்டதாகும்.*

வேதங்களை நம்புவது பின்வரும் விடயங்களை உள்ளடக்கியிருத்தல் வேண்டும்.

*1 – அவை அல்லாஹ்வால் அருளப்பட்டவை என்பதை நம்புதல்.*

2 – அவற்றில் பெயர் குறிப்பிடப்பட்டவற்றை குறிப்பாகவும், பெயர் குறிப்பிடப்படாதவற்றை பொதுவாகவும் நம்பவேண்டும். பெயர் குறித்து சொல்லப்பட்டவைகளை பின்வருமாறு நோக்கலாம்..

முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு – **அல்குர்ஆன்**
**மூஸா** (அலை) அவர்களுக்கு – **தவ்றாத்**
**தாவூத்** (அலை) அவர்களுக்கு – **ஸபூர்**
**ஈஸா** (அலை) அவர்களுக்கு – **இன்ஜீல்**

3 – அவற்றில் உள்ளவற்றை உண்மைப்படுத்துதல். குர்ஆனில் வருபவற்றையும், இடைச்செருகல்களுக்கு உற்படாத முன்னைய வேத செய்திகளையும் இது குறிக்கும்.

4 – அல்குர்ஆனில் கூறப்பட்டிருக்கின்ற சட்டங்கள், சம்பவங்கள், கோட்பாடுகள் போன்றவைகளின் காரணங்களை அறிந்தாலும் சரி அறியாவிட்டாலும் சரி அவற்றை செயல்படுத்துவதும், மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்வதும் அவசியமாகும். அதுபோல் அல்குர்ஆன் முந்திய வேதங்களை மாற்றிவிட்டது ஆகையால் அவற்றை செயல் படுத்தவேண்டியதில்லை. இது குறித்து :

﴿ وأَنْزَلْنَا إِلَيْكَ الْكِتَابَ بِالْحَقِّ مُصَدِّقًا لِمَا بَيْنَ يَدَيْهِ مِنَ الْكِتَابِ وَمُهَيْمِنًا عَلَيْهِ ﴾

**“நபியே முந்நிலும் உண்மையைக் கொண்டுள்ள இவ் வேதத்தை உம்மீது இறைக்கி வைத்துள்ளோம். இது தனக்கு முன்னுள்ள வேதங்களை உண்மைப்படுத்த**

**க்கூடியதாகவும், அவற்றைப் பாதுகாப்பதாகவும் இரு க்கின்றது.**'' (5 :48) என்று அல்குர் ஆன் கூறுகின்றது.

*தவ்றாத், இன்ஜீல் போன்ற வேதங்களை யூத, கிறிஸ்தவர்கள் திரிவுபடுத்திவிட்டனர், கிறிஸ்தவர்களைப் பொறுத்த மட்டில் அவர்களிடம் நான்கு சுவிஷேசங்கள் உள்ளன, அவை மத்தேயு, லூக்கா, மாற்கு, யோவான் என்று அழைக்கப்படுகின்றன. இந்நான்கும் ஒன்றுக்கொன்று முறன்பட்டவை, அத்தோடு இவை பல வீடுத்தம் பிரசுரிக்கப்பட்டுள்ளன, ஒரே சுவிஷேகத்தின் முந்திய பதிப்பிற்கும், பிந்திய பதிப்பிற்குமிடையில் கூட முறண்பாடுகள் காணப்படுகின்றன.*

*அல்குர்ஆன் பல இலட்சம் பிரதிகள் அச்சிடப்பட்டு உலகம் பூறாவும் வினியோகிக்கப்படுகின்றன, ஆனால் அதன் பிரதிகளுக்கிடையில் எத்தகைய முறன்பாடுமில்லை இது ஓர் அற்புதமேயாகும். அல்குர்ஆனில் அல்லாஹு தஆலா*

﴿إِنَّا نَحْنُ نَزَّلْنَا الذِّكْرَ وَإِنَّا لَهُ لَحَافِظُونَ﴾ ''**இந்த வேதத்தை நாமே இறக்கினோம். இதனை நாமே பாதுகாப்போம்**'' ( 15 : 9) என்று கூறுகின்றான்.

## நான்காம் அடிப்படை

**இறைத்தூதர்களை நம்புதல் :**

*இறைத்தூதர்களும் மனிதர்களே, அவர்களுக்கு அல்லாஹ் வஹி எனும் வேத வெளிப்பாட்டை வழங்கி, அதனை எத்திவைக்கும் படி ஏவியுள்ளான். நூஹ், இப்றாஹீம், மூஸா, ஈஸா, முஹம்மத் ஆகியோரை இத்தகைய இறைத்தூதர்களுக்கு உதாரணமாகக் கூறலாம். இத்தூதர்கள் பற்றிய நம்பிக்கை பின்வருவனவற்றை உள்ளடக்கியதாக இருத்தல் வேண்டும்.*

1 – அவர்களின் தூது அல்லாஹ்விடமிருந்து வந்ததாக நம் புதல் வேண்டும். அவர்களில் ஒருவரை நிராகரித்தாலும் அவர்கள் அனைவரையும் நிராகரிப்பதாகவே இருக்கும்.

2 – அவர்களில் பெயர் குறிப்பிடப்பட்டவர்களைக் குறிப்பா கவும், பெயர் குறிப்பிடப்படாதவர்களை பொதுவாகவும் நம்புதல் வேண்டும்.

3 – அவர்கள் தொடர்பான உறுதியான செய்திகளை உண் மைப்படுத்தல்.

4 – இறைத்தூதர்களுள் இறுதியானவரும், முழு மனித சமு தாயத்திற்கும் அனுப்பப்பட்டவருமான முஹம்மத் ஸல்ல ல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது சன்மார்க்க சட்டங்களைச் செயல் படுத்துதல். இது குறித்து அல்கு ர்ஆன் :

﴿فَلاَ وَرَبِّكَ لاَ يُؤْمِنُوْنَ حَتّٰى يُحَكِّمُوْكَ فِيْمَا شَجَرَ بَيْنَهُمْ ثُمَّ لاَ يَجِدُوْا فِى أَنْفُسِهِمْ حَرَجًا مِّمَّا قَضَيْتَ وَيُسَلِّمُوْا تَسْلِيْمًا﴾

**"உமது இரட்சகன் மீது சத்தியமாக, அவர்கள் தங்க ளுக்குள் ஏற்பட்ட சச்சரவில் உம்மை நீதிபதியாக ஆக்கி, நீர் செய்யும் தீர்ப்பைத் தங்கள் மனங்களில் எத்தகைய அதிருப்தியையும் பெறாமல் முற்றிலும் ஏற் றுக் கொள்ளாத வரையில், அவர்கள் விசுவாசிக ளாக மாட்டார்கள்."** (4 :65)

## ஐந்தாம் கடமை

*மறுமை நாளை நம்புதல் :*

கேள்வி கணக்கிற்கும், கூலி வழங்குவதற்குமாக அல் லாஹ் மக்களை எழுப்பும் நாளே மறுமை நாளாகும். அல்

லாஹ் அந்நாளில் கப்ரில் உள்ளவர்களை எழுப்புவான். பின்னர் அல்லாஹ்வின் கட்டளைப்படி சுவன வாதிகளும், நரகவாதிகளும் அவரவர்களின் இருப்பிடங்களுக்குச் செல்வர்.

## இறுதி நாளை ஈமான் கொள்வதில் பின்வரும் விடயங்களும் உள்ளடங்கியிருத்தல் வேண்டும்.

1 – இவ்வுலகில் ஆரம்பம் தொட்டு இறுதிநாள் வரை இருப்பவர்கள் அனைவரையும் அல்லாஹ் மறணிக்கச்செய்து, மீண்டும் உயிர் கொடுத்து எழுப்புவான் என்று நம்புதல் வேண்டும். இது குறித்து அல்லாஹு தஆலா :

﴿ ثُمَّ إِنَّكُمْ بَعْدَ ذَلِكَ لَمَيِّتُوْنَ ثُمَّ إِنَّكُمْ يَوْمَ الْقِيَامَةِ تُبْعَثُوْنَ ﴾

"**(மனிதர்களே!) பின்னர் நிச்சயமாக நீங்கள் இறப்பெய்தக் கூடியவர்கள், பின்னர் மறுமை நாளின் போது நிச்சயமாக நீங்கள் (உயிர் கொடுத்து) எழுப்பப்படுவீர்கள்.**" (23 : 15, 16) என்று கூறுகின்றான்.

2 – கேள்வி கணக்கு, கூலி வழங்குதல் பற்றி நம்புதல். அடியார்களின் செயல் குறித்து அல்லாஹ் விசாரணை செய்வான் இது குறித்து அல்லாஹு தஆலா :

﴿ إِنَّ إِلَيْنَا إِيَابَهُمْ ثُمَّ إِنَّ عَلَيْنَا حِسَابَهُمْ ﴾ "**நிச்சயமாக அவர்களின் மீட்சி நம்பக்கமே ஆகும். பின்னர் நிச்சயமாக அவர்களைக் கேள்வி கணக்கு கேட்பது நம்மீதேயாகும்.**" (88 : 25, 26) எனறு கூறுகின்றான்.

4 – சுவனம், நரகம் ஆகியவைதான் படைப்புக்களின் நிரந்தர தங்குமிடம் என்பதையும் நம்புதல்.

அல்லாஹ்வை ஈமான் கொண்டு, அல்லாஹ்வும், அவனது தூதரும் ஏவியதை இக்லாஸ் எனும் உளத்தூய்மையுடன் தூதரைப் பின்பற்றி நடக்கும் இறையச்சமுள்ளவர்களுக்காகவே சுவனம் தயார்படுத்தப்பட்டுள்ளது. இது குறித்து அல்லாஹ் கூறும் போது :

﴿إِنَّ الْمُتَّقِينَ فِي جَنَّاتٍ وَنَهَرٍ فِي مَقْعَدِ صِدْقٍ عِنْدَ مَلِيكٍ مُقْتَدِرٍ﴾

**" நிச்சயமாக பயபக்தியுடையோர் சுவன பதிகளிலும், (அவற்றிலுள்ள) ஆறுகளிலும் இருப்பார்கள். (மெய்யாகவே) மிக்க உண்மையான இருக்கையில், மிக்க சக்தி வாய்ந்த அரசனிடத்தில் இருப்பார்கள்."** (54 : 54,55) என்று கூறுகின்றான்.

நரகத்தைப் பொறுத்தவரை இறை நிராகரிப்பாளர்களுக்கும், அநியாயக் காரர்களுக்குமாக அது தயார் செய்யப் பட்டுள்ளது. இது குறித்து அல்லாஹு தஆலா

﴿وَقُلِ الْحَقُّ مِن رَّبِّكُمْ فَمَنْ شَاءَ فَلْيُؤْمِنْ وَمَنْ شَاءَ فَلْيَكْفُرْ إِنَّا أَعْتَدْنَا لِلظَّالِمِينَ نَارًا أَحَاطَ بِهِمْ سُرَادِقُهَا وَإِن يَّسْتَغِيثُوا يُغَاثُوا بِمَاءٍ كَالْمُهْلِ يَشْوِي الْوُجُوهَ بِئْسَ الشَّرَابُ وَسَاءَتْ مُرْتَفَقًا﴾

**" (நபியே) நீர் கூறுவீராக உங்கள் இரட்சகனிடமிருந்து (நான் கொண்டு வந்திருக்கும்) இ(வ்வேதமா ன)து சத்தியமானதாகும். ஆகவே எவர் நாடுகிறாரோ அவர் (இதை) விசுவாசித்துக்கொள்ளட்டும். இன்னும் எவர் நாடுகிறாரோ அவர் (இதை) நிராகரிக்க**

**ட்டும். (ஆனால் இதை நிராகரிக்கும்) அநியாயக்காரர் களுக்கு நிச்சயமாக நாம் நரகத்தை தயார் படுத்தியு ள்ளோம். அந்நரகத்தின் சுவர்கள் அவர்களைச் சூழ் ந்துள்ளது. அவர்கள் (தண்ணீர் கேட்டு) இரட்சிக்கத் தேடினால் சூட்டின் உச்சத்தை அடைந்த பழுக்கக் காச் சப்பட்டதைப் போன்ற தண்ணீரைக் கொண்டே அவர் கள் இரட்சிக்கப்படுவார்கள். அது அவர்களுடைய முக ங்களை சுட்டுக் கரிக்கிவிடும். அன்றி அது மிகக்கெட்ட பானமாகும். அவர்கள் தங்குமிடங்களில் அது மிகக் கெட்டதாகும்.**" *என்று கூறுகின்றான்.* (18 : 29)

## மறுமையை ஈமான் கொள்வதில் பின் வருவனவும் உள்ளடங்கும்.

*1 – கப்ரின் சோதனை :*

*கப்ரில் அடக்கம் செய்யப்பட்ட பின்னர் அவரிடம், அவரது ரப்பு, தீன், நபி பற்றியெல்லாம் வினவப்படும். அவர் மு:மினாக இருந்தால் அவர் அறிந்த உறுதியான கலிமா மூலம் அவரை அல்லாஹ் உறிதிப்படுத்துவான். அவர் தனது ரப்பு அல்லாஹ் என்றும், தனது மார்க்கம் இஸ்லாம் என்றும், தனக்கு அனுப்பப்பட்ட நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்றும் பதில் கூறுவார். அடக்கப்பட்டவர் காபிராக, அநியாயக்காரராக இருந்தால் ஹா! ஹா! எனக்குத் தெரியாது, எனக்குத் தெரியாது என்று கத்துவார். நயவஞ்சகனாக அல்லது சந்தேகத்துக் குரியவனாக இருந்தால், எனக்கு எதுவும் தெரியாது, மக்கள் எதையோ சொன்னார்கள் அதையே நானும் சொன்னேன் என்பான்.*

உ – கப்றின் வேதனையை நம்புதல். :

காபிர்கள், முனாபிக்குகளுக்கு கப்ரில் வேதனை செய்யப்படும். அல்குர்ஆன் இது குறித்து :

﴿ وَلَوْ تَرَى إِذِ الظَّالِمُونَ فِيْ غَمَرَاتِ الْمَوْتِ وَالْمَلَائِكَةُ بَاسِطُوْا أَيْدِيَهُمْ أَخْرِجُوْا أَنْفُسَكُمُ الْيَوْمَ تُجْزَوْنَ عَذَابَ الْهُوْنِ ﴾

"**இவ்வநியாயக் காரர்களுக்கு மரண வேதனையிருக்கும் சமயத்தில் அவர்களைப் பார்ப்பீராயின் மலக்குகள் தங்கள் கைகளை நீட்டி (அவர்களிடம்) உங்களுடைய உயிர்களை வெளியேற்றுங்கள் நீங்கள் உண்மையல்லாததை அல்லாஹ் மீது கூறிக்கொண்டிருந்ததாலும், இன்னும் அவனது வசனங்களை பெருமையடித்து புறக்கணித்துக் கொண்டிருந்ததாலும் இழிவான வேதனையை நீங்கள் கொடுக்கப்படுகிறீர்கள் (என்று கூறுவதை நீர் காண்பீர்**" (6 : 93) என்று கூறுகிறது.

## ஆறாம் அடிப்படை

*கத்ரை(விதியை) நம்புதல் :*

கழா கத்ரை நம்ப வேண்டும் என்பதை அல்குர் ஆனும், சுன்னாவும் தெளிவாகவே கூறுகின்றன. இது ஈமானின் ஆறு அடிப்படை அம்சங்களில் ஒன்றாகும். இதை நம்பாதவருடைய இறை விசுவாசமோ இஸ்லாமோ எப்பலனையும் அளிக்காது இது குறித்து அல்குர்ஆனின் வசனங்கள் தெளிவாகப் பேசுகின்றன.

﴿ أَلَـــمْ تَعْلَمْ أَنَّ اللهَ يَعْلَمُ مَا فِى السَّـــمَاءِ وَٱلْأَرْضِ إِنَّ ذَلِـــكَ فِى كِتَابٍ إِنَّ ذَلِكَ عَلَى اللهِ يَسِـــيرٌ ﴾

" (நபியே) வானத்திலும், பூமியிலும் இருப்பவற்றை நிச்சயமாக அல்லாஹ் அறிவான், என்பதை நீர் அறியவில்லையா நிச்சயமாக இது (லவ்ஹுல் மஹ்ஃபூல் என்னும்) புத்தகத்தில் இருக்கின்றது, நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிக்க சுலபமானதேயாகும்." (22 : 70)

﴿ مَا أَصَابَ مِنْ مُصِيبَةٍ فِى ٱلْأَرْضِ وَلاَ فِى أَنْفُسِكُمْ إِلاَّ فِى كِتَـــابٍ مِنْ قَبْلِ أَنْ نَـــبْرَأَهَا إِنَّ ذَلِكَ عَلَى اللهِ يَسِـــيرٌ ﴾

" எந்தத் துன்பமும் -அதனை நாம் சிருஷ்டிப்பதற்கு முன்னதாக (லவ்ஹுல் மஹ்ஃபூழ் என்னும்) புத்தகத்தில் (பதியப்பட்டு) இருந்தே தவிர-பூமியிலோ அல்லது உங்களிலோ ஏற்படுவதில்லை நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிக்க எளிதாகும்" ( 57 : 22)

﴿ إِنَّا كُلَّ شَيْءٍ خَلَقْنَاهُ بِقَدَرٍ ﴾

"நிச்சயமாக நாம் ஒவ்வொரு பொருளையும் (நிர்ணயிக்கப்பட்ட) அளவின்படியே படைத்திருக்கின்றோம்." (54 : 49)

கத்ரை நம்புவதின் படித்தரங்கள் குறித்து அறிஞர்கள் பின்வருவன வற்றைக் குறிப்பிட்டுள்ளனர்.

*I – அறிவு : அல்லாஹு தஆலா அனைத்தையும் அது ஏற்படுவதற்கு முன்னரே மிகத் தெளிவாக அறிந்தவன் .*

*2 – எழுதப்பட்டது : இந்த அறிவின் மூலம் லவ்ஹுல் மஹ்ஃபூழ் ஏட்டில் நடக்கக்கூடிய அனைத்தையும் தெளிவு படுத்தி விட்டான். இது குறித்து :*

﴿أَلَمْ تَعْلَمْ أَنَّ اللهَ يَعْلَمُ مَا فِي السَّمَاءِ والأَرضِ إِنَّ ذَلِكَ فِي كِتَابٍ إِنَّ ذَلِكَ عَلَى اللهِ يَسِيرٌ﴾

"**நபியே"வானத்திலும்,பூமியிலும் இருப்பவற்றை நிச்சயமாக அல்லாஹ் அறிவான் என்பதை நீர் அறியவில்லையா? நிச்சயமாக இது (லவ்ஹுல் மஹ்ஃபூழ் என்னும்) புத்தகத்தில் இருக்கின்றது, நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிக சுலபமானதேயாகும்.**" (22 : 70) *எனக் குர் ஆன் குறிப்பிடுகின்றது.*

*3 – அல்லாஹ்வின் அதிகாரத்தில் அவன் நாடாத எதுவும் இருக்காது என்றும், வானத்திலோ, பூமியிலோ அவன் நாட்டமில்லாமல் எதுவும் நடக்காது என்றும் நம்புதல் வேண்டும். இது குறித்து :*

﴿لِمَنْ شَاءَ مِنْكُمْ أَنْ يَسْتَقِيمَ وَمَا تَشَاءُونَ إِلاَّ أَن يَّشَاءَ اللهُ رَبُّ الْعَالَمِينَ﴾

" **உங்களில் (நேர் வழியில்) நிலைத்திருக்க நாடுகிறவருக்கு (இது ஒரு அறிவுரையாகும் ) இன்னும் அகிலத்தாரின் இரட்சகனாகிய அல்லாஹ் நாடினாலன்றி நீங்கள் (நல்லறிவு பெற) நாட மாட்டீர்கள்** " (81 : 28, 29 ) *என்று அல்குர்ஆன் கூறுகிறது.*

4 – அனைத்தும் அல்லாஹ்வின் படைப்பு, அவை அவனது நாட்டப்படியும், வல்லமையாலும் படைக்கப்பட்டன என்று நம்புதல். இது குறித்து அல்லாஹு தஆலா :

﴿ اَللّٰهُ خَالِقُ كُلِّ شَيْءٍ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ وَكِيْلٌ﴾

" **அல்லாஹ்(வே) ஒவ்வொரு பொருளையும் படைக்கி றவன், அவனே ஒவ்வொரு பொருள் மீதும் பொறுப் பாளனுமாவான்.**" (39: 62) என்று கூறுகின்றான்.

இவையே இஸ்லாம், ஈமான் குறித்த சுருக்கமான குறிப்புக்களாகும். இதுபற்றி விரிவாக அறிய விரும்புவோர் இதுபற்றி விரிவாக எழுதப்பட்ட அறிஞர்களின் நூற்களை நாடவும்.

## முடிவுரை

இந்த மகத்தான மார்க்கத்தில் இணைந்து கொண்டவர் கள் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளவேண்டும் என்றும், மார்க்கத்தில் உறுதியோடு இருக்க வேண்டும் என்றும், அல் லாஹ்விடம் அனுதினமும் உறிதிப்பாட்டை கேட்க வே ண்டும் என்றும், கேட்டுக்கொள்கிறேன். தனக்கு சத்திய மார்க்கத்தின் பக்கம் நேர்வழி காட்டிய அல்லாஹ்வை அனுதினமும் புகழ்ந்து கொள்வதோடு, மார்க்க விடய ங்களை நீங்கள் அதிகம் வாசித்து அதனை விளங்கிக் கொ ள்ளவும் வேண்டும். குறிப்பாக அல் – குர்ஆனை தப்ஸீர் இப்னு ஸஃதீ போன்ற சுருக்கமான விளக்கவுரைகளுடன் சேர்த்து படிக்கவேண்டும்.

உள்ளம் விளை நிலங்களைப் போன்றது. விளை நிலத் தில் மரங்களும், கனிகளும் உற்பத்தியாவதற்கு தொடர்ச் சியாக நீர் தேவை, நீர் இன்றேல் பயிர்கள் செத்துவிடும்.

இவ்வாறே உள்ளமும் அல்லாஹ்வுடைய ஞாபகத்தாலும், குர்–ஆன் ஓதுவதாலும் உயிர் பெறுகிறது. அல்லாஹ்வின் திக்ரை விட்டும் பராக்காகும் போது இறந்து விடுகிறது.

அடுத்து தனது மனைவி, மக்கள் சகோதர சகோதரிகள், போன்றோர் அனைவருக்கும் இதை எடுத்துச் சொல்லவேண்டும். உங்கள் மூலமாக ஒருவர் இதை ஏற்பது மிகப் பெரும் பேறாக இருக்கும். "தன் மூலம் ஒருவருக்கு ஹிதாயத் (நேர்வழி) கிடைப்பது பெறுமதியான சென்னிற ஒட்டகை கிடைப்பதை விட மேலானதாகும்) என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள். நல்லதொரு வார்த்தை பேசுவதோ, கடிதம் எழுதுவதோ, ஒலிப் பதிவு நாடாவோ கூட இது விடயத்தில் பெரும் பயனளிக்கலாம். இங்கு இஸ்லாத்தை ஏற்ற ஒருவர் அனுப்பிய மடலால், ஒலிப்பதிவு நாடாவால் அவர்களின் எத்தனை உறவினர்கள் இஸ்லாத்தில் இணைந்துள்ளனர்! அவர்கள் மூலமாக அவர்களது குடும்பமும், அவர்கள் மூலமாக ஊர்மக்களும் இஸ்லாத்தில் இணைந்தால் அதனால் கூட உங்களுக்கு மகத்தான கூலியுண்டு.

முஸ்லிம் சகோதரர்கள் தம்முடன் இணைந்து கொண்ட புதிய சகோதரர்களுக்கு தக்வாவைக் கொண்டு உபதேசிப்பதுடன், அவர்களுடன் நல்லுறவை ஏற்படுத்திக் கொள்வதிலும், நல்லவிடயங்களில் அவர்களுக்கு உதவி செய்வதிலும் கவனம் செலுத்துதல் வேண்டும்.

அடுத்து மற்றுமொரு முக்கிய விடயத்தை இங்கு குறிப்பிட வேண்டும், இங்குள்ள க.:பீல் (தொழில் வழங்குவோர்) களிடம், அல்லது வேறு ஏனைய முஸ்லிம்களிடம் பொய் கூறல், கெட்ட பழக்கங்கள், பிறமதத்தவர்களுடன்

நல்லமுறையில் நடந்து கொள்ளாமை போன்ற பல குறைக ளைக் காணலாம்.

இஸ்லாம் நிச்சயமாக இவற்றை அங்கீகரிக்க வில்லை. இஸ்லாம் எல்லா வகையான நன்மைகளையும் ஏவி, அனை த்துத் தவறுகளையும் தடுக்கின்றது. ஆகவே இஸ்லாமிய சமுதாயத்தவர்களுல் சிலர் செய்கின்ற தவறுகளுக்கு குறித்த அந்நபர்கள்கள்தான் பொறுப்பேற்க வேண்டுமே தவிர இஸ்லாத்திற்கும் அத்தவறுகளுக்கும் எத்தொடர்பும் கிடையாது.

முஸ்லிம் சகோதர சகோதரிகளே! உங்களுக்கு மார் க்க சம்மந்தமான, அல்லது வேறு தொடர்பான பிரச்சனை கள் இருந்தாலும் நீங்கள் பிரச்சார வழிகாட்டல் நிலையம் ஒன்றுடன் தொடர்பு கொள்ளுங்கள். அல்லாஹ்வின் அரு ளால் உங்கள் பிரச்சனைகளை தீத்துக் கொள்ளலாம்.

என்னால் இயன்றதைச் செய்திருக்கிறேன். அல்லாஹ் நம்மனைவரது நல்லறன்களையும் ஏற்று கபூல் செய்வா னாக. அவ்வாறு செய்யும் ஆற்றல் அதிகாரமெல்லாம் அவனுக்கே உண்டு, அவனே யாவுமறிந்தவன்.

எங்கள் நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது ஸலவாத்தும் ஸலாமும் நின்று நிலவட்டுமாக.

# الطريق إلى النجاة

## كيف تكون مسلماً ؟

إعداد

**فيصل بن سكيت السكيت**

تاميلي

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بسلطانة

THE COOPERATIVE OFFICE FOR CALL & FOREIGNERS GUIDANCE AT SULTANAH